லீஸனில் இதை தடுக்கலாம். இதை எல்லா இடங்களிலும் தடுப்பதற்கு என்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றி ஆலோசித்துக்கொண்டிருக்கிறோம். கூடிய சீக்கிரம் இதன் பேரில் ஒரு முடிவுக்கு வரலாம்.

Mr. SPEAKER : 377-ம் 378-ம் சேர்த்து ஒன்றாக எடுத்துக் கொள்ளலாம்.

*Vedaranyam-Kodaikkarai road*

* 377 *Q.*—Sri A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வேதாரண்யம்-கோடிக்கரை ரஸ்தாவுக்கு கப்பி போட்டு தார் போட திட்டம் உண்டா ?

(ஆ) அப்படியானால், அதற்காக எவ்வளவு ரூபாய் அனுமதித்திருக்கிறது ?

(இ) மத்திய அரசாங்கம் இதில் எவ்வளவு தொகை கொடுக்க ஒத்துக்கொண்டிருக்கிறது ?

(ஈ) இவ்வேலை துவங்கியாகிவிட்டதா ?

(உ) இல்லையானால், எப்பொழுது துவக்கப்படும் ?

The Hon. Sri P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) & (*c*) The work is estimated at Rs. 6·35 lakhs. Against this a grant not exceeding Rs. 4 lakhs has been promised by the Government of India.

(*d*) & (*e*) The detailed estimate is being revised as required by the Government of India. The work will be commenced after the Government of India sanction the detailed estimate.

* 378. *Q.*—Sri A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கோடிக்கரை–வேதாரண்யம் ரஸ்தா கப்பி போடும் திட்டம் வேலை துவக்கியாகிவிட்டதா இல்லையென்றால், எப்போது துவக்கப்படும் ?

The Hon. Sri P. KAKKAN : The approval of the Government of India to the detailed estimate is awaited and the work will be started after it is obtained.

Sri A. VEDARATHNAM : ஸார், 1955-ல் நவம்பரில் எற்பட்ட கடும் புயல் காரணமாக இந்த திட்டத்தை மத்திய சர்க்கார் அனுமதித்தது. இதுவரை அதற்கு ஸாங்ஷன் கிடைக்கவில்லை என்று தெரிகிறது. ஆகவே இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு ரிமைண்டர் அனுப்பி இந்த திட்டத்தை நிறைவேற்றுவதற்கு முயற்சி எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri P. KAKKAN : முதல் பதிலில் நான் சொன்னேன். இந்த திட்டத்திற்கு முதலாவதாக 4 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. அதன் பின்னால் இதற்கு எஸ்டிமேட் தயாரித்தபோது 6·35 லட்சம் ரூபாய்க்கு வந்தது. இந்த அதிகப்படியான தொகைக்கு அனுமதி கேட்பதற்காக மத்திய சர்க்காருக்கு எழுதி அனுப்பினோம். அவர்கள் அதை திரும்பியும் 4 லட்சத்திற்கே எஸ்டிமேட் தயாரித்து அனுப்பும்படி திருப்பி அனுப்பிவிட்டார்கள். ஆகவே அதற்காக வேண்டி சீப்-இன்ஜினீயருக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. அது வந்தவுடன் நிறைவேற்றப்படும் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

20th September 1958]

Sri V. K. KOTHANDARAMAN : இந்த வேலை நீண்ட நாட்களாகவே நடைமுறைக்கு கொண்டுவராமல் இருப்பதால், இதை உடனடியாக நிறைவேற்றுவதற்காக இந்த சர்க்கார் மத்திய சர்க்காரை ஞாபகப்படுத்துமா ?

The Hon. Sri P. KAKKAN : இப்போதுதான் சொன்னேன். கனம் அங்கத்தினர் அவர்களுக்கு இதில் எவ்வளவு அக்கறையிருக்கிறதோ அதைவிட அரசாங்கத்திற்கு அதிக அக்கறை இருக்கிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

*Police firing at Valparai*

* 379 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state whether any compensation has been paid to the families of workers at Valparai who were shot on the Independence Day, 1957?

The Hon. Sri C. SUBRAMANIAM : The question does not arise because no one was shot at Valparai on Independence Day, 1957. I may, however, add that the Government have paid a sum of Rs. 2,500 to the widow of Sri Gnanamuthu who has killed when the police had to open fire on a riotous mob at Valparai on Republic Day of that year, viz., on 26th January 1957.

Sri N. K. PALANISAMI : ஸார், இதில் பாக்கி இருக்கக்கூடியவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுப்பதைப்பற்றி அரசாங்கம் என்ன ஆலோசனை செய்திருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இது விஷயமாக இதை விசாரித்த கமிஷனும் யாருக்கு எல்லாம் நஷ்ட ஈடு கொடுக்கவேண்டும் என்று சிபாரிசு செய்திருந்தது. அதில் சட்டபூர்வமாக யாருக்கெல்லாம் உதவி அளிக்கவேண்டுமோ அதன் பிரகாரம் உதவி அளிக்கப்பட்டது. மற்றவர்கள் அரசாங்கத்திற்கு மனு செய்துகொள்ளவில்லை. அதனால் உதவி கொடுக்கவேண்டுமென்ற எண்ணமும்' அரசாங்கத்திற்கு ஏற்படவில்லை.

Sri M. KALYANASUNDARAM : மற்றவர்களின் குடும்பங்கள் மனு செய்துகொண்டால் அவைகள் கவனிக்கப்படுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி இப்போது சொல்ல முடியாது. மனு செய்துகொண்டால் அதைப்பரிசீலித்துப் பார்த்து சொல்லலாம்.

Sri M. R. KANDASWAMI MUDALIYAR : ஸார், சில அரசியல் கட்சிகளின் கிளர்ச்சிகளின் காரணமாக இவ்விதம் துப்பாக்கி பிரயோகங்கள் நடைபெறுகின்றன. இவ்விதம் துப்பாக்கிப் பிரயோகம் நடந்த பிறகு அதில் இறந்துபோனவர்களுக்கு நஷ்ட ஈடு வேண்டுமென்று கேட்டு அதற்காக அரசாங்கப் பணத்தை எடுத்துக் கொடுத்து துர்விநியோகம் செய்யப்படுகிறது என்று பொதுமக்கள் அதிருப்தி கொண்டிருக்கிறார்கள் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இவ்விதம் அரசாங்கத்திற்குத் தெரியாது. கனம் அங்கத்தினர் அவர்கள் வேண்டுமானால் அவ்விதம் எண்ணிக்கொள்ளலாம். இவ்விதம் நஷ்ட ஈடு கொடுப்பதை துர்விநியோகம் செய்வதாக சொல்ல முடியாது. இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில் இதில் இறந்து போனவர் இதில் சம்பந்தப்பட்டவர் அல்ல. வெளியே நின்று சும்மா பார்த்துக்கொண்டிருந்தவர்தான். அதன் காரணமாகத்தான் அவருடைய குடும்பத்திற்கு நஷ்ட ஈடு கொடுக்க வேண்டுமென்று அரசாங்கம் நினைத்து கொடுக்க முன் வந்தது.